வாகு குலத்திற் புகுந்து விட்டாரென்பது வான்மீகி முதலிய முன்னோர்களின் ஸித்தாந்தம். இது ஸ்ரீவசநபூஷணாதிகளில் விரியும்.

இராவணனொருவனே குற்றமியற்றினவனாயினும் அவனுடைய ஸம்ஸர்க்கமே ஹேதுவாகக் குலங்குலமாக நசித்தொழிந்தது. "கேசவன் தமர் கீழ்மேலெமரேழெழுபிறப்பும், மாசதிரிது பெற்று நம்முடை வாழ்வு வாய்க்கின்றவா" என்கிறபடியே, ஒருவன் அநுகூலனானால் அவனுடைய ஸம்பந்தி ஸம்பந்திகளும் உஜ்ஜீவிக்குமாபோலே ஒருவன் பிரதிகூலனானால் அவனுடைய ஸம்பந்தி ஸம்பந்திகளும் அழிந்துபோகக் கடவர்கள். பிரதிகூலனான இராவணனுடைய ஸம்பந்தத்தாலே ராக்ஷஸகுலமடங்கலும் பாழ்பட்டன; அநுகூலனான ஸுக்ரீவனுடைய ஸம்பந்தத்தாலே வாநரஜாதியடங்கலும் வாழ்ச்சி பெற்றன.

குன்றெடுத்த தோளினனை—ஆயர்க்கு நேர்ந்த ஆபத்தைப் போக்கினது ஒரு பெருமையோ? என்னுடைய ஆபத்தைப் போக்கவேண்டாவோ வென்பது இங்கு உள்ளுறை.

விரிதிரை நீர் விண்ணகரம் மருவி நாளும் நின்றானை—கீழ்ச்சொன்ன விபவாவதாரங்களுக்குப் பிற்பட்டவர்களையும் அநுக்ரஹிக்கைக்காகவன்றோ திருவிண்ணகரிலே நித்ய வாஸம் பண்ணுகிறது. திருவிண்ணகர்—ஒப்பிலியப்பன் ஸந்நிதி என்றும், உப்பிலியப்பன் ஸந்நிதி என்றும் வழங்கப்பெறும். சோழநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்று.

திருவிண்ணகரிலே நின்றான்; திருக்குடந்தையிலே கிடந்தான்; நின்றால் எங்கேனும் புறப்பட்டுப் போக நினைவுண்டு போலும் என்று நினைக்கும்படியாயிருக்கும்: பள்ளிகொண்டிருந்தால் அங்ஙனே நினைப்பாரில்லையே: 'ஸம்ஸாரம் கிழங்கெடுத்தாலல்லது போகோம்' என்று கிடக்கிற கிடையாயிற்று. [மாலை] "மாலாய்ப் பிறந்த நம்பியை மாலே செய்யும் மணாளனை" என்கிறபடியே தானும் வ்யாமோஹசாலியாய் அடியார்களையும் வ்யாமோஹசாலிகளாக ஆக்குமவன் என்க [நெடியானை] இப்படிப்பட்டவன் இப்போது எனக்கு எட்டாதவனாயினானென்று காட்டுகிறபடி.

அடிநாயேன் நினைந்திட்டேனே—அவனுடைய மேன்மைக்கு எல்லையில்லாதாப்போலே என்னுடைய தாழ்வுக்கும் எல்லையில்லை; திறந்த வாசலெல்லாம் நுழைந்து திரியும் ஜந்துபோலே மிகத் தண்ணியன். இப்படிப்பட்ட நான் அப்படிப்பட்ட பரமபுருஷனை நினைந்திட்டேன்—'அம்மானாழிப் பிரானவன் எவ்விடத்தான் யானார், எம்மாபாவியர்க்கும் விதிவாய்க்கின்று வாய்க்குங்கண்டீர்' என்றாப்போலே, மிக நீசனான அடியேனுக்கும் விதி வசத்தாலே நேர்ந்த இக்கலவி நித்யமாய்ச் செல்ல வேணுமென்று நினைந்திட்டே னென்றவாறு. ... .... .... 29

மின்னுமாமழைதவழும்மேகவண்ணா! விண்ணவர்தம்பெருமானேயருளாயென்று*
அன்னமாய் முனிவரோடமரரேத்த அருமறையைவெளிப்படுத்தவம்மான்றன்னை*
மன்னுமாமணிமாடமங்கைவேந்தன் மானவேற்பரகாலன்கலியன்சொன்ன*
பன்னியநூல்தமிழ்மாலைவல்லரர் தொல்லைப்பழவினையைமுதலரியவல்லார்தாமே. 30

| | | | |
|---|---|---|---|
| முனிவரோடு அமரர் ஏத்த | முனிவர்களும் தேவர்களும் ஸ்தோத்ரம்பண்ண | மன்னு மாமணி மாடம் மங்கை வேந்தன் | சாச்வதமான சிறந்த மணி மாடங்களையுடைய திருமங்கைநாட்டுக்குத் தலைவரும் |
| அன்னம் ஆய் அரு மறையை வெளிப்படுத்த | ஹம்ஸரூபியாய் அவதரித்து அருமையான வேதங்களை பிரகாசிப்பித்த | | |
| அம்மான் தன்னை | ஸர்வேச்வரன் விஷயமாக, | மானம் வேல் | பெருமை தங்கிய வேற்படையை யுடையவரும் |

| | | | |
|---|---|---|---|
| பரகாலன் | பிறமதத்தவர்கட்கு யமன் போன்றவருமான | என்று சொன்ன | என்று பிரார்த்தித்து அருளிச் செய்த |
| கலியன் | திருமங்கையாழ்வார், | பன்னிய | மிகவும் பரம்பின |
| மின்னும் மா மழை தவழும் மேகம் வண்ணா | 'மின்னலோடு கூடியும் மிகவும் குளிர்ந்தும் தவழ்ந்து வருகின்ற மேகம்போன்ற வடிவையுடையவனே! | தமிழ் நூல் | தமிழ் சாஸ்த்ரமாயிராநின்ற |
| | | மாலை | இச்சொல் மாலையை |
| | | வல்லார் தாம் | ஓதவல்லவர்கள் |
| | | தொல்லை | அநாதியான |
| விண்ணவர் தம் பெருமானே | தேவாதி தேவனே! | பழ வினையை | முன்னை வினைகளை |
| | | முதல் | வேரோடே |
| அருளாய் | அருள்புரியவேணும் | அரிய வல்லார் | களைந்தொழிக்கவல்லவராவர் |

* * *—இத்திவ்வியப் பிரபந்தம் கற்பார்க்குப் பயனுரைத்துத் தலைக்கட்டும் பாசுரம் இது. "பன்னிய நூல் தமிழ் மாலைவல்லார் தொல்லைப் பழவினையை முதலரிய வல்லார் தாமே" என்று பயனுரைக்கும் முகத்தால் அப்படிப்பட்ட பேற்றைத் தாம் பெற்று மகிழ்ந்தமை தொனிப்பிக்கப்பட்டதாகும்.

மின்னுமா மழைதவழும் மேகவண்ணா—மின்னி முழங்கி வில்லிட்டு அழகியதாய் வர்ஷிப்பதொரு காளமேகம் போன்ற வடிவுபடைத்த பெருமானே! இங்கே வியாக்கியான வாக்கியம் காண்மின்;—"*அடிநாயேன் நினைந்திட்டேனே என்ற இவருடைய ஆர்த்த நாதத்தைக் கேட்டு இவருடைய தாபமெல்லாம் நீங்கும்படியாகக் குளிரநோக்கிக்கொண்டு காளமேக நிபச்யாமமான வடிவோடே வந்து முகங் காட்டின படியைச் சொல்லுகிறது."

விண்ணவர்தம் பெருமானே! அருளாய் என்று—கீழ்ச்சொன்ன மின்னுமா மழை தவழும் மேகவண்ண வடிவை ஓவாத ஊணாக உண்டு களிக்கப்பெற்ற அயர்வறும மரர்களுக்கு அதிபதியே!. கடலிலே வர்ஷிப்பது போலவும் மீனுக்குத் தண்ணீர் வார்ப்பதுபோலவும் அவர்களுக்கு உன்னைக் கொடுப்பது ஓரேற்றமோ? [அருளாய்] அவர்கள் உன்னை நித்யாநுபவம் பண்ணுமாபோலே நானும் உன்னை நித்யாநுபவம் பண்ணும்படி கிருபை பண்ணவேணும் [என்று மன்னுமாமணி மாடமங்கை வேந்தன் மானவேற் பரகாலன் கலியன் சொன்ன பன்னிய நூல் தமிழ் மாலை] மங்கை நாட்டுக்கு அரசராய், வேல் பிடித்துப் பகைவெல்லுந் தொழிலிலே ஊன்றிக் கிடந்தவர் "அரசமர்ந்தானடி சூடுமரசையல்லால் அரசாக வெண்ணேன் மற்றரசு தானே" என்றாற்போன்ற அத்யவஸாயத்தின் கனத்தாலே இங்ஙனே பேசினாராயிற்று. எம்பெருமானும் அவனடியார்களும் உவந்து முடிமேற் கொள்ளும் பிரபந்தமாதலால் மாலை எனப்பட்டது. ஆக இப்படிப்பட்ட திவ்ய ப்ரபந்தத்தை ஓதவல்லவர்கள் அநாதியான ஸம்ஸாரத்தை யடியறுத்து நித்ய கைங்கரியம் பெற்று வாழப் பெறுவரென்று பயனுரைத்துத் தலைக்கட்டினாராயிற்று. ... ... 30

அடிவரவு:—மின், பார், திருவடி, இந்திரன், ஒண்மிதி, அலம், வற்பு, நீர், வங்கம் பொன், பட்டு, நெஞ்சு, கல், முளை, கல்லுயர்ந்த, கன்று, பொங்கு, கார், முற்று, தோராளும், மை, மைவளம் உள்ளூர், இருகை, மின், தேமருவு, செங்கால, தென்னிலங்கை, அன்றாயர், மின்னுமா, வையம்.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

எம்பெருமானார் திருவடிகளே சரணம். ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் இயற்றிய

நாலாயிர திவ்யப்ரபந்த திவ்யார்த்ததீபிகையில்

**திருநெடுந்தாண்டக வுரை முற்றுப்பெற்றது.**